உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.

# சத்தியம் பேணல்.

சத்தியமென்றால் மெய் என்று அர்த்தம். சத்தியம் பேணல் என்பதற்கு விரிவாய்த்தாற்பரியங் கொண்டால், தருமங்களைப் பரிபாலித்தல் எனவுந்தகும். ஏனெனில் உண்மை வழி நிற்றலினாலன்றோ இவ்வுலகில் தருமங்கள் பரிபாலிக்கப்படுகின்றன? ஆகவே, பழிக்கஞ்சாது பொய் சொல்லல் மிகுந்த பாவமாகும்.

பொய் சொல்லக் கூடாதென்பது யாவரும் அறிந்தவிஷயமே. ஆயினும் அது மனிதன் கடைப்பிடிக்கவேண்டிய முக்கிய தருமங்களி லொன்றென்று உணர்ந்தவர் மிகச்சிலரேயாவர். சிலர் மகாபாதகங்களுக்குள் பொய் அடங்கவில்லைத்தானே யென்றும், பொய்யை ஒருவன் கூறினால் அதுவாயுவுடன் வாயுவாய்ப்பறியும் ஒரு சத்தந்தானே யென்றுங் கருதுகின்றனர் போலும். இன்னுஞ்சிலர்
"மாதர்க்கிதங் கவிவாணர்க்குச் சாலவணக்கங் குருநாதர்க்கு நீதியோடாசாரமன்பி னயந்தவர்க்குக், கோதற்ற வாசகம் பொய்க்குப் பொய் கோளுக்குக் கோளறிவிலாதவர்க் கிரட்டிப்பறிவுடையோர் செய்யுமாண்மைகளே"
என்ற பாடசாலைச் சாட்டாகக் கொண்டு பொய்ச்சொல்லாதிய தீமைக ளைப்புரிகின்றனர். இக்காலத்திற்பலர் சத்தியத்தை ஆன்மலாபத்திற் குரிய முக்கிய சாதனமாகக்கருதி நடவாவிடினும் நமது சாஸ்திரங்க ளெல்லாம் சத்தியத்தை விசேடித்துக் கூறுகின்றன. முண்டகம், தைத்திரீயம், பிரகதாரணியம் ஆகிய உபநிடதங்களில் பிரம்மசாக்ஷாத்காரம் பெற விரும்புவோருக்குச் சாத்தியத்தை முக்கியசாதனமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீமத். தாயுமான சுவாமிகளும், "........ பொய்வளரு நெஞ்சி னர்கள் காணாதகாட்சியே பொய்யிலா மெய்யறிவில், போ தபரி பூரண வகண்டிதாகாரமாய்ப் போக்குவரவற்றபொருளே......." என்று கூறியருளினார். மேலும் திருவள்ளுவநாயனாரும், "யாமெய்யாக்கண்டவற்றுளில்லை யெனைத்தொன்றும் வாய்மையினல்லபிற" எனவும், "பொய்யாமை பொய்யாமை யாற்றின றம்பிற. செய்யாமை செய்யாமை நன்று" எனவும் விசேடித்துக் கூறினார். இவ்விதம் நமது ஆப்தர்கள் சத்தியத்தை மிகச்சிறப்பித்துக் கூறினமைக்குக் காரணமென்ன வென்று ஆராய்வாம்.

இவ்வுலகத்தில் தருமங்கள் முற்றிலும் பாழடையாமற் சிறிதேனும் நிலைபெற்றிருக்கில், அதற்கு முக்கிய காரணஞ் சத்தியமே, சத்தியந் தலை தடுமாறினால் தருமங்கள் சீர் குலைந்தன என்று தாற்பரியம், ஒரு தேசத்தில் அல்லது ஒருகிராமத்தில் சத்தியம் எவ்வளவு தலை தடுமாறுகின்றதோ அவ்வளவு அக்கிரமங்களும், இழிந்த மனோ பாவமுள்ள ஜனசங்கமும் அங்கே விருத்தியாகிவிடுமென்பது நுணுகி ஆராய்பவர்க்கும் புலப்படும். ஆகவே சத்தியநெறி

நிற்பவராலேயே இவ்வுலகில் தருமங்கள் பரிபாலிக்கப்படுகின்றன வென்பது யூகிக்கப்பட்டது.

இனி ஒருவனது ஆன்ம ஈடேற்றத்திற்கும் சத்தியமே முக்கிய சாதனமென்பது மேற்காட்டப்பட்ட பிரபல பிரமாணங்களால் தெரிகிறது. ஏனெனில் சத்தியத்தைங் கடைப்பிடிப்பவன் தன் மனச்சாட்சிக்கு மாறாக நடக்கமாட்டான். ஆகவே பாவங்களினின்றும் விடுபடுகிறான். ஆயின், சத்தியநெறிநிற்போ ரெல்லாரும் சிறிதும் பாவ மின்றியிருக்கின்றார்களோ வென்றால், கூறுதும் : அவர்களும் தரும சங்கடங்களுற்ற சமையங்களில் அல்லது தமது போதத்தின் விளக்கப் பிசகு காரணமாய் அரிதாய்த் தவறக்கூடும். ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள். “.. குற்றங் குறைந்து குணமேலிடு மன்பர் கூட்டத்தையே, முற்றுந் துணையென நம்புகண்டாய் சுத்தமூட நெஞ்சே' என்றும் “குற்றங் குறையக் குணமேலிட வருளை, யுற்றவரே யாவிக் குறவாம் பராபரமே" என்றுங் கூறியவற்றின் உட்கிடக்கையை நோக்கினால் மேலெழும் ஆட்சேபங்களுக்குச் சமாதானங் காணலாம்.

ஒருவன் தன் மனத்தில் தீய எண்ணங்களைப் பிரதமத்தில் சங் கற்பித்து அவற்றை நிறைவேற்றிக் கொள்ளும் வண்ணம் பகிர்விஷயப் பட்டுப் பாவச் செய்கைகளைப் புரிதல் மன அழுக்காகிய அத்திவாரத்தில் நிர்மாணிக்கப்பட்ட பாவமாதலால் அதற்குத் தன்பலனையளிக் குஞ்சத்தியதிகமாகும். ஒருவன் தருமசங்கடத்தின் பாற்பட்டோ அல்லது போத அறிவின் திறமின்மையாலோ பகிர்விஷய சுற்றுச்சார்புகளினால் அதிக்கிரமிக்கப்பட்டுப் பாவத்திற் குள்ளாதல் மனச்சங்கற் பத்தின் வலிமை புடனெழுந்த பாவமன்று, ஆகவே அது மனத்தில் சங்கற்பபூர்வமாய் வேரூன்றக் கூடியதுமன்று, அல்லது ஒருவனது சத்தியநிலையை சாஸ்வதமாய்க் கெடுக்கக்கூடியது. மன்று, ஞானிகள் செய்யும் பாவங்கள் அன்னாரைப் பற்றாவென்று நமது ஞான நூல்கள் கூறுவதன் தாற்பரியமும் இன்னவையேயாகும், சத்தியம் பேணலில் ஒருவனுக்கு மனப்பூர்வமான அபிமான மிருக்குமேயாகில், அவன் சோபானக்கிரமமாய்ப் பாமார்த்தநிலையை யெய்துவான், இவ்வித மான காரணங்களைக் கொண்டே சத்தியத்தை நமது சாஸ்திரங்களில் விசேடித்துக் கூறப்பட்டிருக்கின்றது.

சத்தியத்தினின்று சிறிதும் வழுவாது நடப்போருக்குச் சில சமையங்களி லுண்டாகுஞ் சங்கடங்கள் எவ்வளவென்பது சத்திய நெறியில் நிற்போபே அனுபவத்தி னுணரத்தக்கது. அரிச்சந்திர மகாராசன் சத்தியத்தைப் பேணி நடந்து படாதபாடெல்லாம் பட்டுக் கெடாதகேடெல்லாங் கெட்டது உலகறிந்த விஷயம், அக்காலத்திலேயே அரிச்சந்திரன் அப்பாடுபட்டா னென்றால், வஞ்சனை பொறாமை அவதந்திரம் மலிந்த இக்காலத்தில் சத்திய நெறியில் நிற்போர் தாண்டிச் செல்லவேண்டிய சங்கடங்கள் எவ்வளவென்பதைக் கூறவும் வேண்டுமா?

அறநெறி நிற்போர் இன்னது செய்யின் அறமாகுமா அன்றி மறமாகுமா என்று சந்தேகிக்கக் கூடிய சந்தர்ப்பங்களையே தருமசங்கடம் என்பர் பெரியோர். நவீன நாகரிகம் பரவும் இக்காலத்தில் இவ்வித சங்கடங்கள் உலகப் பிரவிர்த்தியி

லிருப்போர்க்கு மிகுதியு முண்டாகும். ஸ்தூல நோக்கில் கொடிய பாவங்கள் போல் தோற்றுபவைகள் கூடச் சில சந்தர்ப்பங்களில் தரும சங்கடநிலைக்குட்பட்டுப் பாவமாகாமல் அல்லது அற்ப பாவமுடைமையாய் ஆகக்கூடும். இவைகளை விளக்கிக் கூறுதற்கு ஈண்டு இடமின்று, உண்மை பேசும் விஷயத்தில் இவ்விட முண்டாகுஞ் சங்கடங்கள் என்ன என்பதையே இங்கு ஆராய்வாம்:-

திருவள்ளுலநாயனார் வாய்மை என்பதைப்பற்றிக் கூறிய அதிகாரத்தின் முதற்பாவிலேயே 'வாய்மையெனப்படுவ தியாதெனின் யாதொன்றும், தீமையிலாத சொலல்" என்று அதன் இலக்கணத்தைக் கூறியிருக்கின்றார். அஃதாவது உண்மையெனப்படுவது யாதொரு தீமையும் விளைக்காத சொல் என்பதாம். உள்ளதை உள்ளபடி சொன்னால் தீமையும் உள்ளதை மறைத்துக் கூறினால் நன்மையும் விளையக்கூடிய சந்தர்ப்பங்களுமுண்டாகு மென்பதை யூகித்தே இவ்விதங் கூறியருளினார். இவ்வித சந்தர்ப்பங்களில் குற்றமில்லாத நன்மை பயக்குஞ் சொல்லைக் கூறுதலே மெய்யாகு மென்பதை விளக்குவதற்காகவே 'பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்று இரண்டாம் பாவிற் கூறினார். இவ்வித சந்தர்ப்பங்கள் எவ்விதமுண்டாகுமென்பதைத் திருஷ்டாந்தவாயிலாய் விளக்குவாம்.

சுப்பனென்பவன் கந்தனென்பவனைக் கொலை செய்யும் நோக்கமாய்க் கையிற் கத்தியுடன் துரத்திக் கொண்டு வருகிறானென்று பாவனை பண்ணிக்கொள்வோம். கந்தனென்பவன் ஓர் முடக்குச் சந்தின் ஒழுங்கையால் ஓடி மறைந்துவிடுகிறான். பின்னேவந்த சுப்பனென்பவன் அச்சந்தில் நின்ற சாத்தனென்பவனை நோக்கி கந்தன் எவ்வழியால் ஓடினான்' என்று வினவுகிறான். அப்போது சரத்தன் உள்ளதை உள்ளபடியே கூறினால், சாத்தனுங் கொலைக்குச் சாதகமாயிருந்த குற்றத்திற்குட்படுவான், இவ்விஷயத்தில் உள்ளதை மறைத்துக் கூறுதலே மெய்யாகும். இது கொலைவிஷயமாயுள்ளது, ஸ்தூலமான தீங்கில்லாத சாதாரண விஷயங்களிலும் உள்ளதை உள்ளபடி கூறல் பாவமாகலாம். உதாரணமாக; சதிபதிகள் சரசசல்லாபமாகக் கூடியிருத்தல் உலகவழக்கம், ஒரு கசடன் துர் எண்ணத்துடன் அச்செயல்களைக் கரந்து நின்று பார்த்துவிட்டு, உள்ளதைத்தானே சொல்லுகிறேன் என்று உலகினர்க்கு அவைகளைப் பறையறைந்தால் அது வாய்மை யெனப்படுமா? இவ்விதமாய் நுணுகி யாராய்ந்தால், மகாபாதகங்கள் எனப்படுபவைகளை ஒருவன் வாச்சியத்தின்படி விலக்கி நடந்துகொண்டு கொடூரமான பாவங்களைப் புரிதல்கூடு மென்பதும், பொதுவான வெளிநோக்கில் பாவம்போற் சோற்றுபவைகள் லக்ஷியார்த்தத்தில் பாவமாகாமையாய் அல்லது அற்பபாவமுடைமை யாயிருக்கக்கூடு மென்பதும் புலப்படும். ஆதலால் ஒவ்வொருவனும் தனதுயிரைப் போல் பிறவுயிர்களையும் மதித்துச் சத்தியம் சீவகாருண்ணியம் கபட மின்மை யாதிய சற்குணங்களைக் கடைப்பிடித்து மனச்சுத்தத்துடன் நடப்பானேயாகில். அதுவே பாவங்களை விலக்கினமைக்குச் சரியாகும்சாஸ்திரங்களின் லக்ஷியார்த்தத்தை யூகித்துணர்ந்து அதற்கியைய நடவாமல் வாச்சியார்த்தத்தையே முக்கிய மெனக்கொண்டு நடந்தமையும், இந்துக்களாகிய நாம் பிற்காலத்தில் க்ஷணகதியடைந்தமைக்குரிய

காபணங்களுளொன்றாகும். ஆதலால், நாம் ஓர் செயலைச் செய்யும் போது அச்செய்கையினால் பிறவுயிர்களுக்குத் தீமைவிளையாத வழியை மனச்சுத்தத்துடன் ஆராய்ந்து நடப்பதே முக்கியமெனக் கருதி நடத்தல் வேண்டும்.

உடம்பின் புரத்திலுள்ள அழுக்குக்கு நாம் அருவருக்கின்றோம் ஆனால் நெஞ்சகத்தையோ, அசத்தியம் பொறாமை கபடம் அவதந்திரம் ஆதியமல பாண்டமாய் வைத்திருப்பார் சிலர். இன்னாரைக் குறித்தேபோலும் சிவவாக்கியரும், "அழுக்கறத் தினங்குளித் தழுக்கறா மாந்தரே அழுக்கிருந்த தெவ்விடம் அழுக்கிலாத தெவ்விடம் அழுக்கிருந்த தவ்விடத் தழுக்க றுக்க வல்லிரேல், அழுக்கிலாத சோதியோ டணுகிவாழலாகுமே" என்று திருவாய் மலர்ந்தருளினார். "புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை வாய்மையாற் காணப்படும்" என்றார் நாயனாரும், ஆதலால் நாம் வெளியழுக்கை அருவருத்துச் சுத்திசெய்தலிலும் உள்ளழுக்காகிய மன அழுக்கைச் சுத்திசெய்தல் மிகவும் முக்கியமெனக் கருதல்வேண்டும். இவ்விதங் கருதி நடப்பவனே சத்தியநெறி நிற்பவனுமாவான்.

இங்ஙனம்,

ஞானாகாசம்,

சித்தாந்தம் - 1915 ஹு - மே மீ